**1975 தொடக்கம் 2019 வரையான ஆண்டுகளில் நடைபெற்ற க.பொ.த. (சா/தர), க.பொ.த. (உ/தர)ப் பரீட்சைகளின் சுட்டெண்களைப் பெற்றுக்கொள்ள எதிர்பார்க்கும் பரீட்சாரத்திகளுக்கான அறிவுறுத்தல்கள்**

1. குறித்த விண்ணப்பப்படிவத்தை (CT4) இலங்கை பரீட்சைத் திணைக்களத்தின் இணையத்தளத்திலிருந்து பின்வரும் இணைப்பின் ஊடாக தரவிறக்கம் செய்து கொள்க.
   https://doenets.lk/documents/downloads/certificates-application-forms/Serch%20of%20Index.pdf

2. விண்ணப்பப்படிவத்தை அச்சிட்டு **சரியாகப்** பூரணப்படுத்துக.

3. இதன்போது சுட்டெண் தேவைப்படும் பரீட்சையுடன் தொடர்புடைய விதத்தில் நீங்கள் பரீட்சைக்குத் தோற்றிய **வருடம், பரீட்சை நிலையம், உங்கள் முழுப்பெயர்** (விண்ணப்பப்படிவத்தில் குறிப்பிட்டவாறு) ஆகியவற்றைச் சரியாகக் குறிப்பிடுக.

4. ஒரு விண்ணப்பப்படிவத்துக்கு ரூ.150.00 தொகையை இலங்கை வங்கியின் பின்வரும் கணக்கிலக்கத்தில் வைப்பிலிட்டு குறித்த பற்றுச்சீட்டை அல்லது திரைக்குறிப்பைப் (screenshot - நிகழ்நிலைக் கொடுப்பனவுகளுக்கு மாத்திரம்) பெற்றுக்கொள்க.

   | | |
   |---|---|
   | இலங்கை வங்கியின் கணக்கிலக்கம் | : **7041228** |
   | கணக்கின் பெயர் | : **இலங்கை பரீட்சைத் திணைக்களம்** |
   | கிளை | : **பத்தரமுல்லை** |

5. பின்வரும் ஆவணங்களை கீழே குறிப்பிடப்பட்டுள்ள இணையத்தள முகரிக்கு இலத்திரனியல் தபாலாக இணைத்தனுப்புக.

   doecertificates@gmail.com

   - பூரணப்படுத்தப்பட்ட உங்கள் விண்ணப்பப்படிவம்
   - பணம் செலுத்தியமையை உறுதிப்படுத்தும் பற்றுச்சீட்டு அல்லது திரைக்குறிப்பு
   - தேசிய அடையாள அட்டை / செல்லுபடியாகும் சாரதி அனுமதிப்பத்திரம் அல்லது செல்லுபடியாகும் கடவுச்சீட்டின் தெளிவான படப்பிரதி அல்லது வருடல் செய்யப்பட்ட (scanned) பிரதி

6. அதில் தலைப்பு (Title) குறிப்பிடப்பட வேண்டிய இடத்தில் "Index Number" என்பதனைக் குறிப்பிட்டு, "விண்ணப்பிக்கும் திகதி", "தொலைபேசி இலக்கம்" ஆகியவற்றை மாத்திரம் உள்ளீடு செய்க.

7. நீங்கள் தொடர்புடைய தகவல்களை (உதாரணம்: பரீட்சையின் பெயர், வருடம், பரீட்சை நிலையம் போன்றன) சரியாக வழங்கியிருந்தால் மாத்திரமே மேற்குறித்த செயன்முறையின்படி உங்கள் சுட்டெண்ணை தேடியறியக்கூடியதாய் இருக்கும்.

8. பூரணமற்ற, தெளிவற்ற விண்ணப்பப்படிவங்களையும் பற்றுச்சீட்டுக்களையும் கொண்ட கோரிக்கைகள், தேவையான சகல ஆவணங்களையும் கொண்டிராத கோரிக்கைகள் என்பன எதுவித முன்னறிவித்தலுமின்றி நிராகரிக்கப்படும்.

9. உங்கள் கோரிக்கையுடன் தொடர்புடைய உத்தியோகபூர்வ ஆவணங்கள் பரீட்சைத் திணைக்களத்தில் காணப்பட்டால் மாத்திரமே உங்கள் சுட்டெண்ணை தேடியறியக்கூடியதாய் இருக்கும்.

10. நீங்கள் வழங்கியுள்ள தகவல்களின் அடிப்படையில், பரீட்சைத் திணைக்களத்தின் அலுவலர்கள் உங்கள் சுட்டெண்ணை உறுதிப்படுத்திக் கொண்டதன் பின்னர், அதனை உங்கள் இலத்திரனியல் தபால் முகரிக்கு அனுப்பி வைப்பர்.